*Tanjore Headquarters Hospital*

*354 *Q.*—SRI M. D. THIAGARAJA PILLAI : கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) தஞ்சை ஜில்லா தலைநகர் ஆஸ்பத்திரியில் எவ்வளவு படுக்கைகள் உள்ளன ?

(ஆ) அதற்கு சென்ற 3 வருஷங்களில் எவ்வளவு செலவு செய்யப் பட்டு வருகிறது ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) 636, Sir.

(*b*) Rs. 8,73,663 in 1955–56, Rs. 9,80,153 in 1956–57 and Rs. 10,74,708 in 1957–58.

SRI A. VEDARATHNAM : இந்த மருத்துவ நிலையத்தை இப்போது இருக்கும் இடத்திலிருந்து வேறு இடத்திற்கு மாற்றுவதற்கு அரசாங்கம் உத்தேசித்திருக்கிறதா ? எந்த இடத்திற்கு மாற்றப்படும் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அதை அடியோடு மாற்றுவதற்கு உத்தேசமில்லை. சில செக்ஷன்கள் அங்கேயேதான் இருக்கும். புதிதாக ஏற்படுத்தப்படும் செக்ஷன்களை காலேஜ் கட்டுகிற இடத்தில் ஏற்படுத்தும்.

*Lignite at Vilambur*

*356 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) தென்னாற்காடு மாவட்டம் கள்ளக்குறிச்சியை அடுத்த விளாம்பூர் கிராமத்தில் கறுப்பு நிலக்கரி கிடைப்பதை அரசாங்கம் பரிசீலித்ததா ?

(ஆ) அதன் விபரம் என்ன ?

(இ) இது சம்பந்தமாக என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது ?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) There is no information available regarding the occurrence of coal in the Vilambur village, Kallakurichi taluk, South Arcot district, as no systematic mapping of the area has been carried out so far. But the general geology of the area does not show any possibility of coal deposits occurring there.

(*b*) & (*c*) Do not arise.

SRI A. VEDARATHNAM : இந்த இடத்தில் நிலக்கரி இருக்கிறதா என்று பரிசீலனை செய்யப்பட்டதா ? யார் பரிசீலனை செய்தார்கள் ? பரிசீலனை செய்தார்கள் என்றால் அதனுடைய ரிஸல்ட் என்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : சாதாரணமாக ஜியாலஜிக்கல் சர்வே செய்வதற்கு முன்னால் சில அறிகுறிகள் தெரியும். அந்த மாதிரியான அறிகுறிகள் ஒன்றும் தெரிவதற்கு முன்னால் பரிசீலனை செய்ய முடியாது. அவ்விதம் பரிசீலனை செய்தால் அது வீணாகத்தான் போய்விடும்.

SRI S. NAGARAJA MONIGAR : ஸார், இந்தமாதிரியான செல்வம் நாட்டுக்கு மிக தேவையானது என்பது தெரிந்திருந்தும், மதிப்புமிக்க வேதரத்தினம் பிள்ளை அவர்கள் இதைப்பற்றி சர்க்காருக்கு முன்பே தெரிவித்திருக்கிறார்களா ? அதன் பேரில் என்ன கவனம் செலுத்தப்பட்டது ?

MR. SPEAKER : It is only a suggestion. The Hon. Minister need not answer it.

10 a.m. SRI M. P. SUBRAMANIAM : ஸார், அமைச்சர் அவர்கள் கூறியது போல அந்தப் பகுதியிலே நிலக்கரி போன்ற பொருள்கள் கிணறுகளிலிருந்து வெட்டி யெடுக்கப்படுவதாக மாவட்டக் கலெக்டர் அவர்களுக்கும் மற்றும் தாசில்தார் போன்ற அதிகாரிகளுக்கும் கடிதம் எழுதியிருப்பதாக அங்கத்தினர் அவர்கள் காண்பித்தார்கள். கள்ளக்குரிச்சி, ஆத்தூர் போன்ற பகுதிகளில் வெட்டியெடுக்கப்படுவது பழுப்பு நிலக்கரி அளவுக்காவது இருக்கிறதா என்று பரிசீலிக்க முயற்சி செய்வார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : The Government have to act on expert opinion and not on amateur suggestions.

MR. SPEAKER : இன்னும் நான்கு கேள்விகள் இருக்கின்றன. இன்னும் 5 நிமிஷ நேரம் எடுத்துக் கொண்டு முடித்து விடலாம்.

*Madurai Melakkal drinking Water Supply Scheme*

* 357 Q.—SRIMATHI P. K. R. LAKSHMIKANTHAM (on behalf of Sri V. Sankaran) : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(a) when the (Madurai) Melakkal Drinking Water Supply Scheme is expected to be completed; and

(b) how much of the work has been carried out till now?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) The first and second stages of the Madurai Melakkal Water Supply Improvements Scheme are expected to be completed by the end of 1960. The third and fourth stages of the scheme may be completed by the end of 1966.

(b) About 70 per cent of the work on the first stage has been completed.

SRIMATHI P. K. R. LAKSHMIKANTHAM : ஸார், இந்த மேலக்கால் திட்டம் முடிவடைந்தால் தான் மதுரையில் குடி தண்ணீர் கஷ்டம் தீரும் என்று நினைப்பதால், இந்தத் திட்டம் எவ்வளவு சீக்கிரத்தில் முடிவடையும் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : நான் சொன்னேன் ஒவ்வொரு பகுதியாக, இரண்டு பகுதிகள் 1960–ம் ஆண்டு முடிவிற்குள் முடிவடைந்து விடும். மற்ற இரண்டு பகுதிகள் 1966-ல் தான் முடிவடையும். அதற்கு ஸாங்க்ஷன் எல்லாம் ஆகவேண்டும். இரண்டு பகுதிகளுக்கு ஸாங்க்ஷன் ஆகிவிட்டது; 130, 140 லட்சம் ஆகிறது.

SRI S. PAKKIRISAMI PILLAI : 358-வது கேள்வியை திங்கட்கிழமையன்று எடுத்துக் கொள்ளவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

MR. SPEAKER : எனக்கு ஆட்சேபணை இல்லை. 358-வது கேள்வி திங்கட்கிழமையன்று எடுத்துக் கொள்ளப்படும்.

*Slum Clearance Scheme*

* 359 Q.—SRI K. SATTANATHA KARAYALAR (on behalf of Sri M. Kalyanasundaram) : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(a) the total amount allotted during the Second Plan period for schemes of slum clearance in urban areas other than Madras City; and